# ருது நூல்

## சாஸ்திரம்



சரஸ்வதி புத்தகசாலை
175, செட்டியார் தெரு,
கொழும்பு

உ
கடவுள் துணை

# ருதுநூலம்

## ருது பலாபலன்களின் விபரம்

### மாத பலாபலன்

சித்திரை மாதம் புருஷனுக்காகாது
வைகாசி சுகமாயிருப்பாள்
ஆனி புத்திர சம்பத்தாயிருப்பாள்
ஆடி பல புருஷரையிச்சிப்பாள்
ஆவணி நல்ல குழந்தைகளைப் பெறுவாள்
புரட்டாசி விருத்திபுத்தியுடையவள்
ஐப்பசி புத்திருண்டாகி விதவையாவாள்
கார்த்திகை பலரையும் தூஷிப்பாள்
மார்கழி நல்ல குழந்தைகளைப் பெறுவாள்
தை புண்ணியஞ் செய்பவளாயிருப்பாள்
மாசி திரவியமுண்டாயிருப்பாள்
பங்குனி வெகு குழந்தைகளைப் பெறுவாள்

### வார பலாபலன்

ஞாயிறு மிக வியாதியாயிருப்பாள்
திங்கள் பதிவிரதையாயிருப்பாள்
செவ்வாய் இடுக்கண் வுண்டாயிருப்பாள்
புதன் புத்திரரும் பொருளுமுண்டாயிருப்பாள்
வியாழன் பாக்கியவதியாயிருப்பாள்
வெள்ளி பதிபக்தி உடையவளாயிருப்பாள்
சனி விபத்தையடைவாள்

## திதி பலாபலன்

பிரதமை பாவியாயிருப்பாள்
துவிதியை பாக்கியவதியாயிருப்பாள்
திரிதியை குழந்தைகளைப் பெறுவாள்
சதுர்த்தி பல புருஷரையிச்சிப்பாள்
பஞ்சமி நன்மையையடைவாள்
சஷ்டி சண்டைக்காரியாயிருப்பாள்
சப்தமி புத்திரபாக்கியமுண்டாயிருப்பாள்
அஷ்டமி இராட்சசியாயிருப்பாள்
நவமி கிலேசமாயிருப்பாள்
தசமி புத்திரபாக்கியமுண்டாயிருப்பாள்
ஏகாதசி சுகிகரமாயிருப்பாள்
துவாதசி பலரையுந் தூஷிப்பாள்
திரியோதசி நல்ல தேஜசுண்டாகி இருப்பாள்
சதுர்த்தசி பாபஞ் செய்கிறவளாயிருப்பாள்
பௌர்ணமி அசல்வீடு திரிவாள்
அமாவாசை தரித்திரமாயிருப்பாள்

## நட்சத்திர பலாபலன்

அசுவனி சுபகரமாயிருப்பாள்
பரணி அசல்வீடு வாழப் பொறுக்காள்
கிருத்திகை மிக தரித்திரமாயிருப்பாள்
ரோகணி புத்திர சம்பத்தாயிருப்பாள்
மிருகசீரிடம் சுசிகரமாயிருப்பாள்
திருவாதிரை நிற்பாக்கியமாயிருப்பாள்
புனர்பூசம் பதிவிரதையாயிருப்பாள்
பூசம் பதிபட்சமுண்டாயிருப்பாள்
ஆயிலியம் கபடியாய்இருப்பாள்



மகம் புத்திரநாசமடைவாள்
பூரம் கர்ப்ப நஷ்டமடைவாள்
உத்திரம் தனதானியமுண்டாயிருப்பாள்
அஸ்தம் எவ்வளவும் ஆகாது
சித்திரை வாழ்வு குன்றியிருப்பாள்
சுவாதி வெகு பிள்ளைகளைப் பெறுவாள்
விசாகம் அழுக்கடைந்திருப்பாள்
அனுஷம் பதிக்கு நேசமாயிருப்பாள்
கேட்டை சிறையாயிருக்கும்
மூலம் புத்திரருண்டாயிருப்பாள்
பூராடம் விசனமாயிருப்பாள்
உத்திராடம் சம்பத்துடனேயிருப்பாள்
திருவோணம் பாக்கியமுண்டாயிருக்கும்
அவிட்டம் பிள்ளைகளுண்டாயிருப்பாள்
சதயம் பூரணயுசாயிருப்பாள்
பூரட்டாதி நோய்புருஷனையுடையவளாயிருப்பாள்
உத்திரட்டாதி தரித்திரமாயிருக்கும்
ரேவதி சகல சம்பத்துண்டாயிருப்பாள்

## யோக பலாபலன்

விஷ்ணுகம்பம் விசனமுண்டாயிருப்பாள்
பிரீதி சந்தோஷமுண்டாயிருக்கும்
ஆயுஷ்மான் தீர்க்காயுசாயிருக்கும்
சௌபாக்கியம் சம்பத்துண்டாயிருப்பாள்
சோபனம் மங்களமாயிருக்கும்
அதிகண்டம் பாவியாயிருப்பாள்
சுகர்மம் சுகமாயிருக்கும்
திருதி தைரியமுண்டாயிருப்பாள்

சூலம் துர்மரணமாவாள்
கண்டம் பாவியாயிருப்பாள்
விருத்தி நன்மையுண்டாயிருப்பாள்
துருவம் பதிவிரதையாயிருப்பாள்
வியாகாதம் விதவையாகும்
அரிஷணம் யோக்கியமாயிருப்பள்
வச்சிரம் நல்ல ரூபவதியாயிருப்பாள்
சித்தி சகல சம்பத்துண்டாயிருக்கும்
வியதீபாதம் கொடிய விசனமாயிருப்பாள்
வரியான் தர்மசிந்தையாயிருப்பாள்
பரீகம் உறவுக்குப் பகையாயிருக்கும்
சிவம் நல்லவளாயிருக்கும்
அத்தம் திரவியமுண்டாயிருப்பாள்
பிரமம் பாவியாயிருப்பாள்
மாகேந்திரம் வியாதியால் மரணமாவாள்
வைத்திருதி உயிர்வதை செய்வாள்

## கரண பலாபலன்

பவம் சுகமுண்டாயிருப்பாள்
பாலவம் சௌபாக்கியவதியாயிருப்பாள்
கௌலவம் ரூபவதியாயிருப்பாள்
தைதுளை பக்ஷமுண்டாயிருப்பாள்
கரசை விதவையாவாள்
வணிசி கொள்ளக் கொடுக்க வல்லவள்
பத்திரை நன்மையில்லாதவள்
சகுனி நடவாதநடக்கை நடப்பாள்
சதுஷ்பாதம் சந்தோஷமில்லாதவள்
நாகவம் நன்மையில்லாதவள்
கிம்ஸ்துக்கினம் தரித்திரமாயிருப்பாள்



## இலக்கின பலாபலன்

மேஷம்-தரித்திரமாயிருப்பாள்
ரிஷபம்-சொற்ப புத்திரருண்டாயிருப்பாள்
மிதுனம்-பதிபக்ஷமுண்டாயிருப்பாள்
கடகம்-வெகு புத்திரருண்டாயிருப்பாள்
சிம்மம்-புருடனை நீக்கியிருப்பாள்
கன்னி-பதிவிரதையாயிருப்பாள்
துலாம்-தனசம்பத்துண்டாயிருப்பாள்
விருச்சிகம்-விபசாரியாயிருப்பாள்
தனுசு-உத்தம மத்திபமாயிருப்பாள்
மகரம்-மானமில்லாதவளாயிருப்பாள்
கும்பம்-திரவியமுண்டாயிருப்பாள்
மீனம்-புத்திரருண்டாயிருப்பாள்

## இலக்கின ஸ்தானபலன்

மேஷம்-வீட்டிற்கு வீட்டிற்கு வெளியில்
ரிஷபம்-பசுத்தொழுவத்தில்
மிதுனம்-நிர்வாணமாயிருக்கையில்
கடகம்-தண்ணீர்க்கரையில்
சிம்மம்-வீட்டிற்கு வெளியில்
கன்னி-வனமத்தியில்
துலாம்-கிராமமத்தியில்
விருச்சிகம்-அயல்வீட்டில்
தனுசு-தன்வீட்டில்
மகரம்-தண்ணீர்க்கரையில்
கும்பம்-ஜலக்கரையில்
மீனம்-நீர்க்கரையில்

## ஸ்தான பலாபலன்

வீட்டுக்கு வெளியில்-விபசாரி
பசுத்தொழுவமாகில்-பதிவிரதை
நிர்வாணமாகில்-கிலேசம்
தண்ணீர்க்கரையிலாகில்-ஆயுளுண்டு
வனமத்தியிலாகில்-சம்பத்துண்டு
கிராமமத்திலாகில்-விபசாரியாவாள்
அயல்வீடாகில்-கெட்டநடத்தை
வீட்டிற்குள்ளாகில்-ஒழுக்கமுள்ளவள்
கோயிலிடமாகில்-மிகவுஞ் சாமர்த்தியம்
ஸ்திரீமத்தியிலாகில்-சுகமாயிருப்பாள்
படுக்கையிலாகில்-தகப்பனை இழப்பாள்
நிற்கையிலாகில்-நன்ருய் வாழ்வாள்
புசிக்கையிலாகில்-வெகு நன்மையுண்டு
குதிரைமேலாகில்-வெகு திரவியமுண்டு
கொல்லையிலாகில்-காணியாட்சியுண்டு

## ஏழாமிடப்பலன்

சூரியன்-விதவையாவாள்
சந்திரன்-குழந்தைகளை யிழப்பாள்
செவ்வாய்-வேசையாவாள்
புதன்-மலடியாவாள்
குரு-பாக்கியமில்லாதவளா யிருப்பாள்
சுக்கிரன்-வீடுவிட்டுப்போவாள்
சனி-வியாதியா யிருப்பாள்
இராகு-புருஷனை யிழப்பாள்
கேது-உறவுக்குப் பகையாயிருப்பாள்



## ஒரு ஸ்திரீ ருதுவான நக்ஷத்திரத்தில் நவக்கிரகங்களிருக்கில் அவைகளின் பலாபலன்

சூரியனிருக்கில்-புருஷன் மரிப்பன்
சந்திரனிருக்கில்-காஷாயி
செவ்வாயிருக்கில்-இறந்துபோவாள்
புதனிருக்கில்-மலடாவாள்
குருவிருக்கில்-நோன்புடையவள்
சுக்கிரனிருக்கில்-மலடி
சனியிருக்கில்-வேசை
இராகு இருக்கில்-விபசாரி
கேது இருக்கில்-துறவி

## உத்தம பலன்

சுபக்கிரகங்களுடைய அஷ்டவர்க்கங்களிலே ருதுவானலும், ருதுவான லக்கினத்துக்கும் கேந்திரம் திரிகோணம் 2 மிடம் 11 மிடம் சுபக்கிரகங்களிருந்தாலும், 6 மிடம் பாபக்கிரகங்களிருந்தாலும் உத்தம மெனப்படு மென்பதாம்.

## அதம பலன்

யாதொரு உபத்திரத்தில் கிரகணகாலத்தில் சங்கிராந்தியில் பாபக்கிராந்தத்தில் திரியஸ்தமுரிதில் 7 மிடம் பாபக்கிரகமிருக்கும்போது குரு நட்சத்திரங்களில் சூரியன் சஞ்சரிக்கின்ற லக்கினத்தில் புருஷனுக்குச் சந்திராஷ்டமான காலத்தில் ஸ்திரீ ருதுவானல் தோஷமெனப்படும்.

## தரிசன பலாபலன்

தானே பார்க்கில்-துக்கமுண்டு
கன்னியாஸ்திரீ கண்டால்-புண்ணியமுண்டு
கைம்பெண் கண்டால்-விதவை
வியாதியஸ்தர் கண்டால்-நோய்
வேசி கண்டால்-போக பாக்கியம்
மங்கிலியஸ்திரீ கண்டால்-சுமங்கலி
எண்ணெய் தலையர்கள் காணில் தரித்திரம்
புருஷன் கண்டால் துக்கமுண்டு
வெள்ளாட்டி கண்டால் தரித்திரம்

## நாழிகை பலாபலன்

10 நாழிகையுளாகில் உத்தமம்
20 நாழிகையுளாகில் மத்திபம்
30 நாழிகையுளாகில் அதமம்

## கால பலாபலன்

பிராதகாலமானல் சுபம்
முற்பகலானல் தீர்த்தயாத்திரை
மத்தியானமானல் புத்திரசம்பத்துண்டு
பிற்பகலானல் சோரத்துவம்
சாயுங்காலமானல் வெகுபிள்ளைகளுண்டு
அஸ்தமானல் வேசையாவள்
முன்னிராத்திரியானல் தீர்க்காயுளுண்டு
நடுராத்திரியானல் விதவையாவள்
பின்ராத்திரியானல் சுகமில்லாதவள்
சந்திகளானல் பாக்கியமற்றவள்



## மேற்படி ஸ்தனக்குறிப்பு

சாயுங்காலமானல் சூப்பிளைப்போலிருக்கும்
அர்த்தராத்திரியானல் இரண்டுஞ்சுருங்கிப்போம்

## ஜாம பலாபலன்

1 வது ஜாமமானல் சுபகாமரமாயிருப்பாள்
2 வது ஜாமமானல் மங்கிலியமுண்டாயிருப்பாள்
3 வது ஜாமமானல் திரவியமுண்டாயிருப்பாள்
4 வது ஜாமமானல் பலரையும் வேண்டுவாள்

## ஜாம ஸ்தனக்குறிப்பு

1 வது ஜாமம்-ஏந்தும் ஸ்தனமுண்டு
2 வது ஜாமம்-பருத்த ஸ்தனமுண்டு
3 வது ஜாமம்-சாய்ந்த ஸ்தனமுண்டு
4 வது ஜாமம்-சரிந்த ஸ்தனமுண்டு

## ருது ஸ்திரீ வஸ்திரக் குறிப்பு

நகைத்தால்-சிவப்புப்புடவை
கோபமானல்-வெள்ளைப்புடவை
நாணமானல்-கறுப்புப்புடவை

## மேற்படி விந்து பலாபலன்

வட்டமானல் பொருள் சேரும்
சதுரமானல் சத்துரு நாசம்
பிறைபோலானல் ஆயுசு குன்றும்
நீண்டிருந்தால் மரணம்
வண்டுபோலிருந்தால் திரவியமுண்டு
செண்டுபோலிருந்தால் பிள்ளைகளுண்டு

## தோஷ பலாபலன்

1 வது நாழிகையானல்-புருஷனுக்காகாது
2 வது நாழிகையானல்-திரவிய நாசம்
3 வது நாழிகையானல்-சகல நாசம்
4 வது நாழிகையானல்-தரித்திரமாயிருப்பாள்

## நக்ஷத்திர குணம்

அசுவணி, ரோகணி, மிருகசீரிடம், பூசம், உத்திரம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுடம், மூலம், திருவோணம், அவிட்டம், சதயம், உத்திரட்டாதி, ரேவதி இப்பதினறும் உத்தமம். மகம், திருவாதிரை, கிருத்திகை, கேட்டை, புனர்பூசம் இவ்வைந்தும் மத்திமம், மற்றவை அதமமென்பதாம்.

## மேற்படி மாத பலாபலன்

புருட நக்ஷத்திரத்தில் பெண்சாதி ருதுவானலும், கார்த்திகை, திருவாதிரை, புனர்பூசம், மகம், கேட்டை இந்த நக்ஷத்திரபாதம் 4 க்குள் 1 வது பாதத்தில் ஸ்திரீ ருதுவானல் சுபம், 2 வது பாதத்திலானல் 52 பேருக்கு அன்னங்கொடுக்கவும், 3 வது பாதத்திலானல் பரிகாரஞ் செய்யவும், 4 வது பாதத்திலானல் ஓமசாந்தி செய்யவும், பரணி, பூசம், பூராடம், பூரட்டாதி, ஆயிலியம் இந்த நட்சத்திர பாதம் 4 க்குள் 1 வது பாதத்தில் ஸ்திரீ ரிதுவானல் விதவை, 2 வது பாதத்தில் புத்திரஹானி, 3 வது பாதத்தில் நலமிராது, 4 வது பாதத்தில் சுபமில்லே, இதற்கு ஏழு நாளேக்குமேல் சடங்கு செய்விக்கவும்.



## நிஷேக கால அளவு

பரணியில் ருதுவானல் 10 மாதம், பூராடம் 8 மாதம், மகம் 12 மாதம், திருவாதிரை, பூரம் 6 மாதம், ஆயிலியம், கார்த்திகை, கேட்டை 4 மாதம், உத்திரம் 5 மாதத்துக்குமேல் ருதுவான ஸ்திரீயைப் புருடன் பார்க்கத் தோஷமில்லேயென்பதாம்.

## ஆரூட பலாபலன்

கிழக்கு, செல்வமுண்டாயிருப்பாள்
தென்கிழக்கு, மலடி
தெற்கு, நன்மை
தென்மேற்கு, பிக்ஷையெடுப்பாள்
மேற்கு, போகியாவாள்
வடமேற்கு, விதவை
வடக்கு, ரூபவதி
வடகிழக்கு, வேசை

## திவஸ்திராரூடம்

கிழக்கு, கிழிந்தபுடவை
தென்கிழக்கு, பச்சைபுடவை
தெற்கு, சிவப்புப்புடவை
தென்மேற்கு, வெள்ளேப்புடவை
மேற்கு, அழுக்குப்புடவை
வடமேத்கு, கறுப்புப்புடவை
வடக்கு, பஞ்சவர்ணப்புடவை
வடகிழக்கு, மஞ்சட்சரிகைபுடவையுள்ளவள்

மேற்படி பலாபலன்

கிழிந்தபுடவையானல், கலகம்
பச்சையானல்; தரித்திரம்
சிவப்பானல், வியாதி
வெள்ளையானல், சந்தானம்
அழுக்கானல், நன்மை
கறுப்பானல், விபசாரம்
பஞ்சவர்ணமானல், தரித்திரம்

பிந்து ஆரூடம்

கிழக்கு 3 துளி கண்டிருக்கும்
தென்கிழக்கு 3 துளி
தெற்கு 4 துளி
தென்மேற்கு 2 துளி
மேற்கு 4 துளி
வடமேற்கு 5 துளி
வடக்கு 4 துளி
வடகிழக்கு 4 துளி கண்டிருக்கும்

மேற்படி பலாபலன்

ஒற்றையானல் ஆண்குழந்தைகள்
இரட்டையானல் பெண்குழந்தைகள்

புத்திராரூடம்

கிழக்கு 7 பிள்ளைகள்
தென்கிழக்கு 1 பிள்ளை
தெற்கு 8 பிள்ளைகள்
தென்மேற்கு 4 பிள்ளைகள்
மேற்கு 6 பிள்ளைகள்
வடமேற்கு 2 பிள்ளைகள்



வடக்கு 6 பிள்ளைகள்
வடகிழக்கு 10 பிள்ளைகள்

மேற்படி பலாபலன்கள்

ஒற்றையானல் சம்பத்துண்டு
இரட்டையானல் ரோகமுண்டு

ருது பிரச்சனை பலாபலன்

பிரச்சனை கேட்கவந்தபோது எத்தனை நாழிகையோ அத்தனை நாழிகையில் 3 தள்ளி மற்றவையோடு அன்றைய திதிவாரஞ்சேர்த்துக் கணக்கிட்டு அதை 12 கழித்த சேஷம் 3-5-6-8-11 ஆக வருல் சுசிவதி 10-24-20-32 ஆக வரில் நசிவதி யெனப்படும்.

---

## ருது பரிகாரங்களின் விபரம்

### மாசதோஷ பரிகாரம்

சித்திரைமாசம் புருஷனுக்காகாது என்பதற்குப் பரிகாரம்: புருஷனுக்கும் பெண்சாதிக்கும் ஒரு புதுப்புடவையுடுத்தி அவர்கள் சிரசின்மேல் 1000 துவாரஞ் செய்த மட்கலயத்தை வைத்துச் சலம்விட்டுப் பின்பு ஒரு மங்கிலியஸ்திரீக்கு அந்தப் புடவையைத் தானஞ் செய்யவும்.

ஆடிமாசம் பல புருஷரை யிச்சிப்பாள் என்பதற்குப் பரிகாரம்: பல கனிகளைத் தானங் கொடுக்கவும்.

ஐப்பசிமாதம் பிள்ளைகளுண்டாகி விதவை யாவாள் என்பதற்குப் பரிகாரம்: ஒரு மங்கிலிய ஸ்திரீக்கு அப்யங்கனஞ் செய்வித்து ஒரு சிகப்புப் புடவை மங்கிலியம் மஞ்சள் குங்குமம் தாம்பூலம் சுயம்பாகம் தானங் கொடுக்கவும்.

கார்த்திகைமாசம் பலரையுந் தூஷிப்பாள் என்பதற்குப் பரிகாரம்: சிவாலயங்களில் பசுவின் நெய்யால் விளக்கேற்றி வைக்கவும்.

## வாரதோஷ பரிகாரம்

ஞாயிறு மிக்க வியாதியாயிருப்பாள் என்பதற்குப் பரிகாரம்; கோதுமை தானங் கொடுக்கவும்.

செவ்வாய் இடுக்கணுண்டாயிருப்பாள் என்பதற்குப் பரிகாரம்: ஒரு வீடுபோல் பந்தல் போடுவித்து அப்பந்தலில் ருதுவானபெண்ணை படுக்க வைத்து மேற்படி பந்தல் வாசற்படியை அடைத்து ஒருபக்கம் கொஞ்சங் கொளுத்தி மேற்படி பெண்ணை வேறொரு வழியாக வெளியில் வரவழைத்து ஸ்நானஞ் செய்வித்து மறுபடியும் ஒரு மங்கிலிய ஸ்திரீயை அப்பியங்கனஞ் செய்வித்து அவளுக்கு ஒரு மங்கிலியம் ஒரு சிவப்பு சேலை குங்குமம் மஞ்சள் தாம்பூலம் சுயம்பாகம் தானங் கொடுக்கவும்.

சனி விபத்தை யடைவாள் என்கிறதற்குப் பரிகாரம்: ஒரு வெண்கலப் பாத்திரத்தில் நல்லெண்ணெய் வார்த்து அதில் ருதுவான பெண்ணைத் தன் ரூபத்தைப் பார்வையிடச்செய்து மறுபடியும் வேறொரு கலசத்தில் பால்விட்டுத் தானங் கொடுக்கவும்.



## திதி தோஷ பரிகாரம்

பிரதமை பாவியாயிருப்பாள் என்பதற்குப் பரிகாரம்: சிவாலயங்களில் அபிஷேகம் நைவேத்தியஞ் செய்வித்து எள்ளு தானங் கொடுக்கவும்.

சதுர்த்தி பலபுருஷரை யிச்சிப்பாள் என்பதற்குப் பரிகாரம்: சிவாலயங்களுக்கு அகண்டங்களில் தாமரை நூல்போட்டுப் பசுநெய் விட்டுத் திருவிளக்கேற்றவும்.

சஷ்டி சண்டைக்காரியா யிருப்பாள் என்பதற்குப் பரிகாரம்: கொஞ்சம் பொன்னினால் பசுவைப்போல் செய்து ஒரு பெரியவருக்கு தானங் கொடுக்கவும்.

அஷ்டமி இராட்சசியாயிருப்பாள் என்பதற்குப் பரிகாரம்: சிறு பிள்ளைகளுக்குப் பானகங் கொடுக்கவும்.

துவாதசி பலரையுந் தூஷிப்பாள் என்பதற்குப் பரிகாரம்: சிவாலயங்களில் நெய்விளக்கு ஏற்றிவைத்து ருத்திராபிஷேகஞ் செய்யவும்.

சதுர்த்தசி பாபஞ் செய்கிறவளா யிருப்பாள் என்கிறதற்குப் பரிகாரம்: அரசமரத்தை நாள் 1 க்கு 8 தரம் பிரதக்ஷணமாக 3 நாள் செய்து மூன்றுபேர்களுக்கு அன்னங் கொடுக்கவும்.

பௌர்ணமி அசல்வீடு திரிவாள் என்பதற்குப் பரிகாரம்: தட்சணை தாம்பூலத்தோடு ஒரு கலியாண பூசனிக்காய் தானங்கொடுக்கவும்.

அமாவாசை தரித்திரமா யிருப்பாள் என்பதற்குப் பரிகாரம்: ஒரு வெண்கலப் பாத்திரத்தில்

நல்லெண்ணெய் வார்த்து அதில் ருதுவான பெண்ணை தன் ரூபத்தை பார்வையிடச் செய்து அதைத் தானங் கொடுக்கவும்.

## நக்ஷத்திர தோஷ பரிகாரம்

பரணி அசல்வீடு வாழப் பொறுக்காள் என்கிறதற்குப் பரிகாரம்: வன்னி சமத்து ஓமம் வளர்த்து அதற்கு 27 பிரதக்ஷணம் வரவேணும்.

கிருத்திகை மிக தரித்திரமா யிருப்பாள் என்கிறதற்குப் பரிகாரம்: சிவசுப்பிரமணியருடைய ஆலயங்களில் 27 மாவிளக்கில் பசுநெய்விட்டு விளக்கேற்றி அவைகளுக்கு 227 பிரதக்ஷணஞ் செய்து உபவாசமிருந்து 27 பேர்களுக்கு அன்னம் படைக்கவும்.

திருவாதிரை நிற்பாக்கியமாயிருப்பாள் என்கிறதற்குப்பரிகாரம்: சென்ஜாதி பிள்ளைகளுடைய ஒரு பெரியவரை அப்பியங்கனஞ் செய்வித்து வஸ்திரம் சந்தனம் குங்குமம் மஞ்சள் புஷ்பம் அக்ஷதை தாம்பூலம் தட்சணை கொடுத்துப் பிரதக்ஷணஞ் செய்து அனுப்பவும்.

புனர்பூசம் பதிவிரதைபோலிருப்பாள் என்கிறதற்குப் பரிகாரம்: பண்டு பலகாரந் தானங் கொடுக்கவும்.

ஆயிலீயம் கபடியா யிருப்பாள் என்கிறதற்குப் பரிகாரம்: கந்தமூலாதிகளைச் சிறு பிள்ளைகளுக்குத் தானங் கொடுக்கவும். மேலும் சிவாலயங்களில் தீபாராதனை செய்விக்கவும்.



மகம் புத்திர நாசமடைவாள் என்பதற்குப் பரிகாரம்: கிராம தேவதைகளுக்குப் பொங்கல் வைத்து மாவிளக்கிடவும்.

பூரம் கர்ப்ப நஷ்டமடைவாள் என்பதற்குப் பரிகாரம்: தங்கள் குலதெய்வத்துக்கும் பூவாடைகாரிக்குபூசை நைவேத்தியஞ் செய்யவும்.

அஸ்தம் எவ்வளவுமாகாது என்கிறதற்குச் சாந்தம்: தர்ப்பையால் ஒரு பிரதமைசெய்து 7 ம் நாளில் தகனம்செய்து அச்சாம்பலில் நித்தியம் ஒருவேளை நெற்றியிலிட்டு 108 வில்வபத்திரம் 108 வெண்தாமரைப் புஷ்பம் சிவாலயங்களில் அர்ச்சனைசெய்து நவக்கிரகபூசை சாந்திசெய்து அன்னதானம் செய்யவும்.

சித்திரை வாழ்வு குன்றிப்போம் என்கிறதற்குச் சாந்தம்: சிவாலயங்களிலாவது விஷ்ணு ஆலயங்களிலாவது 1100-செந்தாமரை, வெண்தாமரை, 108-சிவந்த தாழம்பூ, இவைகளை மந்திரவிதியுடனே அபிஷேகம் நைவேத்தியம் அர்ச்சனை செய்வித்து நெல்லிமரத்தின்கீழ் சமாராதனை செய்யவேண்டியது.

விசாகம் அழுக்கடைந்திருப்பாள் என்கிறதற்குச் சாந்தம்: செல்லியிருக்கின்ற கரகத்தில் சலம்விட்டுப் புருஷனும்பெண்சாதியும் ஒருசேலை கட்டிக்கொண்டு அதை தானம் பண்ணவும்.

கேட்டை சிறையிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம்: ஒரு அரசமரத்தை 108-பிரதட்சணம் வந்து ஓமம்வளர்த்தி தங்கள் குலதெய்வத்துக்கு பூசை செய்யவும்.

பூராடம் விசனமாயிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம்: தாமரைநூல் திரிபோட்டு நெய்விட்டுச் சிவாலயங்களில் எண்ணிறந்த விளக்குகள் வைத்து அபிஷேகம் நைவேதனம் அர்ச்சனை செய்வித்து கலியாண பூசணிக்காயுள் பிரதமை சொருகித் தானங் கொடுக்கவும்.

பூரட்டாதி நோய் புருடனை யுடையவளாய் இருப்பாள் என்கிறதற்குச்சாந்தம்: பானகம் தாம்பூலம் தானஞ்செய்யவும்.

## யோக தோஷ பரிகாரம்

விஷ்கம்பம் விசமுண்டாயிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம்: சந்தனம் புஷ்பம் பெரியோர்களுக்குக் கொடுக்கவும்.

அதிகண்டம் பாவியாயிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம்: மங்கிலிய ஸ்திரீக்கு கதம்பப்பொடி மஞ்சள் குங்குமம் காதோலை கரியமணி சுயம்பாகந் தாம்பூலமும் கொடுக்கவும்.

சூலம் துர்மரணமாவாள் என்பதற்குச் சாந்தம்: சிவாலயங்களுக்குக் கற்பூர தீபாராதனை செய்யவும்

கண்டம் பாவியாயிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம்: ஒரு மங்கிலியஸ்திரீக்கும், அவளுடைய புருடனுக்கும், புஷ்பம் சந்தனம் கதம்பப்பொடி மஞ்சள் குங்குமம் காதோலை மங்கலியம் சேலை சோமன் சுயம்பாகம் தாம்பூலம் தட்சணை தானம் கொடுக்கவும்

வியாகாதம் விதவையாவாள் என்கிறதற்குச் சாந்தம்: வெண்கலபாத்திரம் தானங்கொடுக்கவும்.



வியதிபாதம் கொடிய விசனமா யிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம்: ஒருமங்கிலிய ஸ்திரீக்கு மங்கலியம் மஞ்சள் சந்தனம் புஷ்பம் சுயம்பாகந் தானங்கொடுக்கவும்

பரிகம் உறவுக்குப் பகையாயிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம்: சிவாலயத்தை பிரதக்ஷணஞ் செய்து ஈஸ்வரிக்கு கல்ப கஸ்தூரிகள் தரித்து செபஞ் செய்யவும், அல்லது அபிஷேகம் நிவேதனம் பண்ணவும்.

பிரமம் பாவியாயிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம்: பழங்கள் தானங் கொடுக்கவும்

மாகேந்திரம் இந்திரபோகமாயிருப்பாள்

வைத்திருதி உயிர்வதை செய்வாள் என்கிறதற்குச் சாந்தம்: சிவாலயங்களுக்கு அபிஷேக நிவேதனம் செய்க.

## கரணதோஷபரிகாரம்

கரசை விதவையாவாள் என்கிறதற்குச் சாந்தம்: மங்கிலியப்பெண்களுக்குப் புஷ்பம் சந்தனம் தாம்பூலம் அன்னம் கொடுக்கவும்.

சகுனி நடவா நடக்கை நடப்பாளென்கிறதற்குச் சாந்தம்: ஓமம்வளர்த்தி அதை 20-பிரதட்சணஞ் செய்து வந்து தானங் கொடுக்க வேண்டியது.

சதுஷ்பாதம் சந்தோஷ மில்லாதவள் என்கிறதற்குச் சாந்தம்: அன்னங் கொடுக்கவேண்டியது

## இலக்கினதோஷ பரிகாரம்

மேஷம் தரித்திரமாயிருப்பாளென்கிறதற்குச் சாந்தப்: வீட்டுத் தேவதைகளுக்கு வெண்டாமரைப்பூ தரிக்கவேண்டியது.

ரிஷபம் சொற்ப புத்திரருண்டா யிருப்பாள் என்கிறதற்குப்பரிகாரம்; கன்னிகழியாப் பெண்களுக்குப் பழங்கள் கொடுக்கவேண்டியது.

சிம்மம் புருடனை நீக்கியிருப்பாளென்கிறதற்குச்சாந்தம்: சிவாலயங்களுக்கு தாமரை நூலிட்டு 108- விளக்குவைத்து நாகப்பிரதிட்டை செய்து அதைப் பிரதட்சணஞ் செய்யவேண்டியது.

விருச்சிகம் விபசாரியா யிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம்: சிவாலயங்களுக்கு தாமரை நூல் போட்டுப் பசுவின் நெய்விட்டு 108-விளக்கேற்றி நாகப்பிரதிட்டை செய்து அரசமரத்தை நூறு பிரதட்சனம் வந்து அன்னதானஞ் செய்யவேண்டியது.

தனுசு உத்தம மத்திப மானவளா யிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம் ; தனுசு நாழிகை-5' அது முதற்பாதியானல் தர்ப்பாசனம் போட்டு 6-நாள் படுத்திருந்து 10 வது நாளில் சிலருக்கு அன்னங் கொடுக்கவேண்டியது.

மகரம் மானமில்லாதவளா யிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம்: ஒரு சிவாலயத்துக்கு நெய் விளக்கேற்றி அபிஷேகம், நைவேதனஞ் செய்யவேண்டியது.



## ஏழாமிட தோஷ பரிகாரம்

சூரியன் விதவை யாவாள் என்கிறதற்குச் சாந்தம்: ஒரு மங்கிலிய ஸ்திரீக்கு மங்கிலியம் தாம்பூலங் கொடுக்கவேண்டியது.

சந்திரன் குழந்தைகளை யிழப்பாள் என்கிறதற்குச் சாந்தம்; சிறுபிள்ளைகளுக்கு பால்சோறு பழங்களுங் கொடுக்கவேண்டியது

செவ்வாய் வேசியாவாள் என்கிறதற்குச்சாந்தம்:சங்கிரமசாதிக்கு சிவப்பு அன்னம் சிவப்பு பதார்த்தம் சிவப்பு புஷ்ப்பம் கொடுக்கவேண்டியது.

புதன் மலடியாவாள் என்கிறதற்குச்சாந்தம்: சிவாலயத்துக்கு முச்சித்தொட்டிபிள்ளைசெலுத்தி செபம் செய்யவேண்டியது.

குரு பாக்கியமில்லாதவளா யிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம். செவ்வந்தி புஷ்பத்தை பத்தி மாலை கட்டி ஒரு தேவதைக்குத் தரிக்க வேண்டியது

சுக்கிரன் வீடுவிட்டுப்போவாள் என்கிறதற்குச் சாந்தம். ஓமசாந்தி செய்யவேண்டியது.

சனி வியாதியா யிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம், சிவாலயங்களுக்கு அபிஷேகஞ் செய்வித்து குருவுக்கு சமானமாயிருக்கிற ஒரு பெரியவருக்கு அன்னங் கொடுக்கவேண்டியது.

இராகு புருஷனை யிழப்பாள் என்கிறதற்குச் சாந்தம். ஓமசாந்தி செய்யவேண்டியது.

கேது உறவுக்குப் பகையாயிருப்பாள் என்கி றதற்குச் சாந்தம் நவதானியங் கொடுக்கவேண்டியது.

## நக்ஷத்திர பலன்

கலிவிருத்தம்

உத்திராடமாதியாக ஆறுமாறுமுத்தமம்
பித்தனர்பிறந்தநாளும் பிள்ளையாறு மத்திபம்
அத்தமோடுசித்திரை யமைந்தவாழ்வுகுன்றிடும்
மற்றொராறு நாள்கடம்மின் மங்கைகநூலிழப்பளே.

## நாழிகை தோஷ பரிகாரம்

30-நாழிகையுள்ளானல் அதமம் என்கிறதற்குச் சாந்தம்;கனிவர்க்கந் தானங் கொடுக்கவேண்டியது.

## காலதோஷ பலன்

முதற்பகலிலானல் தீர்த்தயாத்திரை
பிற்பகலானல் சோரத்துவம்
அஸ்தமனத்திலானல் சோரத்துவம்
நடுராத்திரியானல் விதவையாவாள்
பின்ராத்திரியானல் சுகமில்லாதவள்
சந்திகளிலானல் பாக்கியமற்றவள்

இவைகளுக்குப் பரிகாரம் குடை தானங் கொடுக்கவேண்டியது. சிவாலயத்தில் திருவிளக்குகள் பரவவைத்து அவைகளை பிரதக்ஷணஞ் செய்யவேண்டியது.



## ஜாம ஸ்தானதோஷ பரிகாரம்

3வது 'ஜாமம் சாய்ந்த ஸ்தனம்' உண்டு என்கிறதற்குச் சாந்தம்: பச்சைபாக்குக் குலைகள் நல்ல பெரியோர்களுக்குத் தானங் கொடுக்க வேண்டியது.

5வது ஜாமம் சரிந்த ஸ்தனமாயிருப்பாள் என்கிறதற்குச் சாந்தம்: இளநீர்க்காய்க் குலைகள் நல்ல பெரியோர்களுக்கு தானங் கொடுக்கவேண்டியது.

## ஜாம தோஷ பரிகாரம்

4-வது ஜாமமாகில் பலரையும் வேண்டுவாள் என்கிறதற்குச் சாந்தம்: விசிறி பானகம் பாக்கு வெற்றிலை தானங் கொடுக்கவேண்டியது.

## வஸ்திர தோஷ பரிகாரம்

பச்சை சேலையானல் தரித்திர மென்பதற்குச் சாந்தம்: மேற்படி சேலையை யாருக்காவது கொடுத்து விட வேண்டியது.

சிவப்பு சேலையானல் வியாதி என்பதற்குப் பரிகாரம்: கலவைச் சந்தனம் ஆலயங்களில் அபிஷேகஞ் செய்யவேண்டியது.

கருப்பு சேலையானல் விபசார மென்பதற்குச் சாந்தம்; மேற்படி ருதுவான ஸ்திரீயும் அவள் புருடனும் வேறொரு கருப்புச்சேலை யுடுத்திக் கொண்டு ஒரு புண்ணிய நதியிலே ஸ்நானஞ் செய்து மேற்படி சேலையை ஒரு மங்கிலியஸ்திரீக்குத் தானங் கொடுக்கவேண்டியது.

பஞ்சவர்ணச் சேலையானல் தரித்திரமென்கிற தற்குச் சாந்தம்: சிவாலயங்களுக்குச் சோடச உப சாரத்தோடு மகா அபிஷேகமும் நைவேதனமுஞ் செய்து அந்த சேலையை யாருக்காவது கொடுக்க வேண்டியது.

**புத்திரான் தொகைதோஷ பரிகாரம்**

இரட்டையானல் ரோகமுண்டு என்பதற்குப் பரிகாரம்: கோரோசனை கலந்த சந்தனம் தானங் கொடுக்க வேண்டியது.

சூரியனிருக்கிற நட்சத்திரமுதல் ருதுவான நட்சத்திரம்வரையில் எண்ணி அதை 33 நட்சத்திரமாக 6 இடத்திற்குப் பங்கிடுவதில் ருதுவான நட்சத்திரம் எந்தத்திக்கில் வருகிறதோ அந்தத் திக்கில் பலாபலன் அறியவேண்டியது.

கிழக்கில் 3 தனவதியாயிருப்பாள்
தென்கிழக்கில் 1 இல்லாளிறப்பாள்
தெற்கில் 3 புருடன் பிரிந்துபோவாள்
தென்மேற்கில் 3 புத்திரர்வாத்தனியாவாள்
மேற்கில் 3 விதவையாவாள்
வடக்கில் 3 தனபாக்கியமுண்டாயிருப்பாள்
பிரமஸ்தானம் இழிவானகுலஞ்சேர்வாள்

சகலருக்கும் சுபமுண்டாகுக.

ருதுநூல் முற்றிற்று

கிடைக்குமிடம்;—

**சரஸ்வதி புத்தகசாலை,**
175, செட்டியார் தெரு, கொழும்பு.

ஸ்ரீ நிரஞ்சன அச்சகம், நல்லூர், யாழ்ப்பாணம்.